(ப்ரணீதா பாத்ரங்கற ஜலகிண்ணத்தை எடுத்து எதிரே வெச்சுண்டு, அக்ஷதையையும், ஜலத்தையும் சேர்த்து, கிழக்குப் பக்கமா 3 தடவை பவித்ரத்தால் ஜலத்தைத் தள்ளி, பரிச்த்தம் செஞ்சு, அக்கிண்ணியை மூக்குவரை உயரத் தூக்கி, அக்னிக்கு வடக்குப்புறம் உள்ள தர்ப்பையிலே வெச்சு, தர்ப்பைகளால் மூடிண்டு மந்த்ரம் சொல்லணும்.)

மந்த்ரம்

ஓம் வருணாய நம: | ஸகலாராதனை : ஸ்வர்ச்சிதம்|

(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

## த்யான – ஆவாஹனம்

(அக்னிக்கு ஈசான மூலையில் (வடகிழக்கில்) ஸ்வஸ்திக் வடிவத்தில் கோலம் போடணும். அதில் ஒரு முகமுள்ள விளக்கை ஏற்றி வைக்கணும். அக்னிமேடைக்குப் பக்கத்தில் கிழக்கிலோ – வடக்கிலோ ஒரு கும்பம் – மாவிலை – மஞ்சள் தடவிய தேங்காய் – அக்ஷதை – புஷ்பம் – சந்தனம் இவைகளால் அலங்கரிக்கப்பட்டு, தீர்த்தத்தால் நிரப்பி, 3 முழத்துண்டு சுற்றி நாணயம் – வாசனை த்ரவ்யங்கள் சேர்த்து வைக்கப்படணும். அக்கும்பத்திலே வருணனையும் ஸ்ரீவல்லப மஹா கணபதியையும் த்யானம் பண்ணி, ஆவாஹனம் பண்ணனும். தீபத்திலே ஸ்ரீ துர்க்காதேவியை த்யானம் பண்ணி – ஆவாஹனம் பண்ணனும். பிறகு ப்ராண ப்ரதிஷ்டை செஞ்சு, ஷோடச உபசார பூஜைகளையும் செய்யணும்.)

### கும்பத்திய வருண த்யான – ஆவாஹனம்

மந்த்ரம்

இமம் மே வருணச்ருதீஹவம் | அத்யாசம்ருடய | த்வாம் வச்யுராசகே | தத்வாயாமி ப்ரஹ்மணா வந்தமான:| ததாசாஸ்தே யஜமானோ ஹவிர்ப்பி:| அஹேட மானோ வருண இஹபோதி| உருஸ்கும் ஸமான ஆயு: ப்ரமோக்ஷீ:|| ஓம் வருணாய நம:| அஸ்மின் கும்பே ஸகல தீர்த்தாதிபதிம் வருணம் த்யாயாமி – ஆவாஹயாமி||

(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

மந்த்ரம்

அகஜானை பத்மார்க்கம் கஜானை மஹர்நிசம் ।
அநேகதம் தம் பக்தானாம் ஏகதந்தம் உபாஸ்மஹே ॥
அஸ்மின் கும்பே ஸ்ரீவல்லப மஹாகணபதிம்
த்யாயாமி — ஆவாஹயாமி।

(அக்ஷதையை எடுத்து ஸமர்ப்பிக்கணும்)

தீபே — ஸ்ரீ துர்க்கா த்யான — ஆவாஹனம்

ஜயந்தீ மங்களாகாளீ பத்ரகாளீ கபாலினி ।
துர்க்கா க்ஷமா சிவா தாத்ரீஸ்வாஹவாஹாஸ்வதா நமோ அஸ்துதே॥
அஸ்மின் தீபே ஸ்ரீ துர்க்காதேவீம்த்யாயாமி — ஆவாஹயாமி।

(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)'

# ப்ராண ப்ரதிஷ்டை

(மந்த்ரம் சொல்லணும்)

(இப்போ வருணன் முதலான தெய்வங்களுக்கு ப்ராணனை ப்ரதிஷ்டை செய்யணும்)

ஓம் அஸ்ய ஸ்ரீ ப்ராணப்ரதிஷ்ட்டா — மஹாம்மந்த்ரஸ்ய
ப்ரஹ்ம விஷ்ணு மஹேச்வரா ருஷய:। ருக் யஜுஸ்
ஸாம அதர்வாணி ச்சந்தாரும்ஸி। ஸகல ஜகத்ஸ்ருஷ்டி
ஸ்த்திதி ஸம்ஹார க்காரிணீ ப்ராணசக்தி: பராதேவதா॥

கரந்யாஸம்

ஆம் பீஜம் । ஹ்ரீம் சக்தி:। க்ரோம் கீலகம் ॥

ஆம் — அங்குஷ்ட்டாப்யாம் நம:।
(கட்டைவிரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஹ்ரீம் — தர்ஜ்ஜனீப்யாம் நம: ।
(ஆள் காட்டிவிரல்களைச் சேர்த்துத் தடவணும்)

க்ரோம் மத்யமாப்யாம் நம : ।
(நடுவிரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஆம் — அநாமிகாப்யாம் நம : ।

(மோதிர விரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஹ்ரீம் – கனிஷ்ட்டி காப்யாம் நம : ।

(சுண்டு விரல்களைச் சேர்த்துத் தடவணும்)

க்ரோம் – கரதல கரப்ருஷ்ட்டாப்யாம் நம : ।

(கைகள் இரண்டையும் சேர்த்து வ்ழிக்கணும்)

அங்கந்யாஸம்

(மந்த்ரம் சொல்லணும்)

ஆம் – ஹ்ருதயாய நம: ।

(மார்பைத் தொடணும்)

ஹ்ரீம் – சிரஸே ஸ்வாஹா ।

(தலையைத் தொடணும்)

க்ரோம் – சிகாயை வஷட் ।

(சிகையைத் தடவணும்)

ஆம் – கவசாய ஹும் ।

(இரு கைகளாலும் உடம்பைத் தழுவணும்)

ஹ்ரீம் – நேத்ரத்ரயாய வௌஷட் ।

(இடது கண் – நடுப்புருவம் – வலதுகண் இவைகளைத் தொடணும்)

க்ரோம் – அஸ்த்ராய பட் ।

(இடது உள்ளங்கையைத் தடவணும்)

பூர்ப்புவஸ்ஸுவரோமிதி திக்பந்த: ।।

(தலையைச் சுற்றிச் சுடக்குப் போடணும்)

த்யானம்

(மந்த்ரம் சொல்லணும்)

ரக்தாம் போதிஸ்த்த போதோல்லஸத்
அருண ஸரோஜாதிருடா கராப்ஜை;
பாசம் கோதண்ட மிக்ஷூத்பவ மளிகுணம்
அப்யங்குசம் பஞ்சபாணான் ।

பிப்ராணாஸ்ருக் கபாலம் த்ரிநயன
ஸஸிதா பீந வக்ஷோருஹாட்யா
தேவீ பாலார்க்கவர்ணா பவது ஸுககரீ
ப்ராணசத்தி : பரா ந: ||

## பஞ்ச பூஜை

லம் – ப்ருதிவ்யாத்மிகாயை – கந்தம் ஸமர்ப்பயாமி|
(சந்தனம் ஸமர்ப்பிக்கணும்)
ஹம் – ஆகாசாத்மிகாயை – புஷ்பம் ஸமர்ப்பயாமி|
(பூ ஸமர்ப்பிக்கணும்)
யம் – வாய்வாத்மிகாயை – தூபமாக்ராபயாமி|
(தூபம் ஸமர்ப்பிக்கணும்)
ரம் – அம்ருதாத்மிகாயை – தீபம் தர்சயாமி |
(தீபம் காட்டணும்)
வம் – அம்ருதாத்மிகாயை – அம்ருதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி|
(நிவேதனம் பண்ணணும்)
ஸம் – ஸர்வாத்மிகாயை – ஸர்வோபசார பூஜாம் ஸமர்ப்பயாமி||
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

ஆம் ஹ்ரீம் க்ரோம் க்ரோம் ஹ்ரீம் ஆம்| யரலவ சஷஸ ஹோம் ஹம்ஸ: ஸோஹம் ஹோஹம் ஹம்ஸ: | அஸ்யாம் மூர்த்தௌ ஜீவஸ்திஷ்ட்டது | அஸ்யாம் மூர்த்தௌ ஸர்வே நத்ரியாணி மனஸ் த்வக் சக்ஷு : ச்ரோத்ர ஜிஹ்வா க்ராண வாக் பாணி பாத பாயூ பஸ்த்தாக்யானி – ப்ராணாப்பான வ்யானோதான ஸமானச் சாகத்ய ஸுகம் சிரம் திஷ்ட்டந்து ஸ்வாஹா || அஸுனீதே புநரஸ்மாஸுசக்ஷு: புந: ப்ராணம் இஹநோ தேஹிபோகம் | ஜ்யோக் பச்யேம ஸூர்யம் உச்சரந்தம் அநுமதே ம்ருளயாந: ஸ்வஸ்தி|| பஞ்சதச ஸம்ஸ்காரார்த்தம் பஞ்சதசவாரம் ப்ரணவ ஜபம் க்ருத்வா |

(15 ஸம்ஸ்காரங்களுக்காக 15 தடவை ப்ரணவ (ஓம்) ஜபம் செய்யணும்)

ஆவாஹிதா பவத । ஸ்த்தாபிதா பவத । ஸந்நிஹிதா பவத। ஸந்நிருத்தா பவத । அவகுண்ட்டிதா பவத । ஸுப்ரிதா பவத । ஸுப்ரஸன்னா பவத । ஸுமுகாபவத । வரதா பவத ।

ப்ரஸீதத ப்ரஸீதத !!

ஸ்வாமின் ஸர்வ ஜகந்நாத
யாவத் பூஜாவஸானகம் ।
தாவத் த்வம் ப்ரீதிபாவேன
கும்பே அஸ்மின் ஸந்நிதிம் குரு ॥
தேவி ஸர்வ ஜகந்மாத்ரே
யாவத் பூஜாவஸானகம்।
தாவத் த்வம் ப்ரீதிபாவேன
தீபே அஸ்மின் ஸந்நிதிம் குரு ॥

ஆவாஹிதானாம் ஸர்வாஸாம் தேவதானாம் அஸ்மின் கும்பே – தீபேச ப்ராணான் ப்ரதிஷ்ட்டாபயாமி ॥
(அக்ஷதை – புஷ்பங்களை ஸமர்ப்பிக்கணும்)

த்ரிமது நிவேதயாமி । (மூவகை இனிப்புகளை இப்போ நிவேதனம் பண்ணணும்)

"ஓம்"

## ஷோடச உபசார பூஜை

### மந்த்ரம் சொல்லணும்

(இப்போ – வருணன் – ஸ்ரீ வல்லப மஹாகணபதி – துர்க்கை இவர்களுக்கு 16 உபசார பூஜைகளைச் செய்யணும்)

மந்த்ரம்

கும்பே–தீபேச ஆவாஹிதாப்ய : ஸர்வாப்யோ தேவதாப்யோ நம: ஆஸனம் ஸமர்ப்பயாமி!
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

கும்பே தீபேச ஆவாஹிதாப்யோ: ஸர்வாப்யோ தேவதாப்யோ நம : – பாத்யம் ஸமர்ப்பயாமி । (உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக்

கிண்ணியில் ஸமர்ப்பிக்கணும்)

" " அர்க்யம் ஸமர்ப்பயாமி, ( " " " )

" " ஆசமனீயம் ஸமர்ப்பயாமி, ( " " " )

" " ஸ்நானம் ஸமர்ப்பயாமி (அந்தக் கும்பத்தை தீபத்தை ப்ரோக்ஷிக்கணும்)

" " ஸ்நானானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி (உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக் கிண்ணியில் ஸமர்ப்பிக்கணும்)

" " வஸ்த்ர உத்தரீயார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி। (வஸ்த்ரங்களுக்குப் பதில் அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

உபவீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி । (பூணூலுக்குப் பதிலாக அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" " ஆபரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி । (அக்ஷதையை ஸமர்ப்பிக்ணும் – ஆபரணத்திற்காக)

" " கந்தம் தாரயாமி । ( சந்தனம் ஸமர்ப்பிக்கணும்)

" " கந்தஸ்யோபரி ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி குங்குமார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" " புஷ்பை: பூஜயாமி । ( பூக்களாலே அர்ச்சிக்கணும் )

1. ஓம் வருணாய நம:। ஓம் ப்ரசேதயே நம:। ஓம் ஸுரூபிணே நம: அபாம்பதயே நம: ஓம் மகரவாஹனாய நம: ஓம் வருணாய நம। நானாவிதபத்ரபரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி॥

2. ஓம் ஸுமுகாய நம: ஓம் ஏகதந்தாய நம: ஓம் கபிலாய நம:। ஓம் கஜகர்ணகாய நம: । ஓம் லம்போதராய நம: ॥ ஓம் ஸ்ரீவல்லப மஹா கணபதயே நம: நானாவித பத்ரபரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி॥

ஓம் துர்க்காயை நம:| ஓம் துர்க்கார்த்தி சமன்யை நம: ஓம் துக்காபத்வி நிவாரிண்யை நம: ஓம் துக்கமச்சேதிண்யை நம: | ஓம் துக்க நாசின்யை நம: || ஓம் ஸ்ரீ துர்க்காயை நானாவித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி|| ( எல்லாப் புஷ்பங்களையும் எடுத்து ஸமர்ப்பிக்கணும்)

கும்பே – தீபேச ஆவாஹிதாப்யோதேவதாப்யோ நம:

" தூபம் ஆக்ராபயாமி | தீபம் தர்சயாமி|

" தூபதீபார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி
( அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" நைவேத்யம் நிவேதயாமி |

(இப்போ இம்மூவருக்கும் வெல்லம் – வாழைப்பழம் தேங்காய் முதலியவைகளை நிவேதனம் பண்ணணும். மணி அடிக்கணும். முன்போலவே நிவேதன மந்த்ரம் சொல்லணும்)

ஓம் பூர்ப்புவஸ்ஸுவ: (தீர்த்தம் ஒரு சுத்து சுத்தணும்.)

தத் ஸவிதுர் வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி தியோ யோ ந: ப்ரசோதயாத் |

( தீர்த்தத்தாலே ப்ரோக்ஷிக்கணும்)

தேவ ஸவிது : ப்ரஸுவ (தீர்த்தம் எடுத்து ஒரு சுத்து சுத்தணும்)

ஸத்யம் து அர்த்தேபை பரிஷிஞ்சாமி (மறுபடி ப்ரதக்ஷிணமா தீர்த்தத்தாலே ஒரு சுத்து சுத்தணும்)

அம்ருதம் அஸ்து | அம்ருத உபஸ்தரணமஸி |

(உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)

(பிறகு நிவேதனப் பொருள்களைக் கையாலே காட்டியபடி நிவேதனம் செய்யணும்)

மந்த்ரம்

ஓம் ப்ராணாய ஸ்வாஹா! ஓம் அபாநாய ஸ்வாஹா!
ஓம் வ்யானாய ஸ்வாஹா – ஓம் உதானாய ஸ்வாஹா!
ஓம் ஸமானாய ஸ்வாஹா – ஓம் ப்ரஹ்மணே ஸ்வாஹா ।
ஓம் ப்ரஹ்மணிம் ஆத்ம அம்ருதத்வாய
கும்ப தீபேசே ஆவா ஹிதாப்ய் : ஸர்வாப்யோ

தேவதாப்யோ நம : தாம்பூலம், கதளீபலம், குரளே ஹாரம், நாளிகேரம்ச ச நிலைய தயாமி (உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)

மத்யே மத்ஸே பாந்யம் ஸமர்ப்பயாமி (தீர்த்தம் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)

அம்ருதாபி தா நமஸி! உத்தரா யாசனம் ஸமர்ப்பயாமி
(தீர்த்தம் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)
" " போஜனானந்தரம் கற்பூர தாம்பூலம் ஸமர்ப்பயாமி!
(தாம்பூலத்தை ஜலத்தால் ப்ரோக்ஷிச்சுட்டு ஸமர்ப்பிக்கணும்)
" " மந்த்ரபுஷ்பம் ஸமர்ப்பயாமி ।

மந்த்ரம்

யோபாம் புஷ்பம் வேத । புஷ்பவான் ப்ரஜாவான் பசுமான் பவதி!
சந்த்ரமாவா அபாம் புஷ்பம்! புஷ்பவான் ப்ரஜாவான் பசுமான் பவதி!!
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)
ஸ்வர்ண புஷ்பம் ஸமர்ப்பயாமி! (அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)
" " கற்பூர நீராஜனம் ஸந்தர்யாமி!

மந்த்ரம்

நதத்ரஸூர்யோ நபாதி நசந்த்ர தாரகம் ।
நேமாவித்யுதோ பாந்திகுதோ அயமக்னி: ।
தமேவபாந்தமனுபாதி ஸர்வம் । தஸ்யபாஸா
ஸர்வமிதம் விபாதி! (கற்பூரதீபம் காட்டணும்)

" " நீராஜனானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி ।
(தீர்த்தத்தைக் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)
" " ஸமஸ்த உபசாரான் ஸமர்ப்பயாமி ।
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

"ஓம்"

## ப்ரஹ்மவரணம்

(தாமே ஹோமம் செய்யும் பக்ஷத்தில் ஒரு கூர்ச்சம் போட்டு, அதில் ப்ரஹ்மாவை மந்த்ரம் சொல்லி வரிக்கலாம்)

(ப்ரஹ்மவரணாதி முகாந்தம் க்ருத்வா)

(இப்போ ப்ரஹ்மாவை வரிப்பது முதல் – ப்ரஜாபதய இதம் வரை செய்யணும்)

(மந்த்ரம் சொல்லணும்)

அஸ்மின் ஹோம கர்மணி ப்ரஹ்மாணம் த்வாம் விருணே! ப்ரஹ்மணே நம: । இதமாஸனம் । இதம் அர்ச்சனம் । ஸகலாராதனை: ஸ்வர்ச்சிதம் ॥

(ப்ரஹ்மா மீது அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும். தாமே செய்பவர் கூர்ச்சத்திலே அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

ப்ரஹ்மாணம் த்யாயாமி! ஆவாஹயாமி ।

(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

(அக்னிக்குத் தெற்கில் ப்ரஹ்மாவையும், வடக்கில் வருணனையும் ஆவாஹனம் பண்ணணும்)

ஆஜ்யம் விலாப்ய । அபரேண அக்னிம் பவித்ராந்தர்
ஹிதாயாம் ஆஜ்யஸ்த்தால்யாம் ஆஜ்யம் நிருப்ய ।
உதீசோ அங்காரான் நிருஹ்ய । தேஷு ஆஜ்யம்
அதிச்ரித்ய । ஜ்வலதா த்ருணேன அவத்யோத்ய ।
த்வேதர்ப்பாக்ரே ப்ரச்சித்ய ப்ரக்ஷால்யப்ரத்யஸ்ய ।
த்ரி: பர்யக்நி க்ருத்வா । உதக் உத்வாஸ்ய ।

(வேறு அக்னியில் நெய்யை உருக்கி, ஹோமம் செய்வதற்கான நெய்க் கிண்ணியில் பவித்ரத்தை இடுப்பிலே வெச்சுண்டு, நெய்யை

நிரப்பிண்டு, வடக்கிலே நெருப்புத் தணலை வெச்சு, அதன் பக்கத்திலே நெய்யை வெச்சு, எரிகிற தர்ப்பைப் புல்லாலே சுத்தி செஞ்சு, அப்புறம் தென்மேற்குப் பக்கமா எரிஞ்சுடணும். இரு தர்ப்பை நுனிகளைச் சேர்த்து, நனைத்து, நெய்யிலே சேர்த்துப் பிறகு 3 முறை ஜ்வாலையால் சுற்றி, வடக்கிலே எறிஞ்சுடணும்)

அங்காரான்ப்ரத்யூஹ்ய। உதகக்ராப்யாம்
பவித்ராப்யாம் புனராஹாரம் த்ரிருத்பூய।
பவித்ர க்ரந்திம் விஸ்ரஸ்ய । அப உபஸ்ப்ருச்ய ।
ப்ராக் அக்ரம் அக்னௌ ப்ரஹரதி ॥

(பிறகு நெய் வெச்சிருக்கிற கிண்ணியை வடக்குப் பக்கமா நகர்த்திண்டு, த்ணங்களை அக்னி குண்டத்தில் சேர்த்துடணும், வடக்கு நுனியுள்ள பவித்ரம் கொண்டு, நெய்யை அக்கினிக்கு மேல் பக்கமா வெச்சுண்டு, மறுபடி 3 தடவை சுத்தி செஞ்சு, பவித்ரத்தின் முடிச்சை அவிழ்த்துவிட்டு, ஜலத்தைத் தொட்டு, அதைக் கிழக்கு நுனியாக வெச்சு அக்னியிலே சேர்க்கணும்)

யேந ஜுஹோதி । தத் அக்னௌ ப்ரதிதப்ய ॥
தர்ப்பை : ஸம் ருஜ்ய । புந: ப்ரதிதப்ய । ப்ரோக்ஷ்ய ।
நிதாய। தர்ப்பான் அத்பி : ஸம்ஸ்ப்ருச்ய ।
அக்னௌ ப்ரஹரதி ।

(எதனால் ஹோமம் செய்யணுமோ; அந்த ஸ்ருக்ஸ்ரவம் என்னும் ஹோமக் கரண்டிகளையோ, அல்லது; ஹோமம் செய்யக் கூடிய இரண்டு தர்வி அதாவது; பொரச இலைகளையும் அக்னியில் சூடாக்கி, தர்ப்பையால் துடைச்சு மறுபடி சூடாக்கி ப்ரோக்ஷணம் செஞ்சி கீழே வெச்சிட்டு, தர்ப்பைகளை ஜலத்தைத் தொட்டு அக்னியில் சேர்த்திடணும்)

பரிதீன் பரிததாதி। ஸ்த்தவிஷ்டோ மத்யம: । அணீயான்
த்ராகீயோன் தக்ஷிணார்த்ய: அணிஷ்டோஹ்ரஸிஷ்ட
உத்தரார்த்ய: । மத்யமம் பரிதிம் உபஸ்ப்ருச்ய ।
ஆகாரஸமிதௌ ஊர்த்வாக்ரே தக்ஷிண உத்தரச்ச அபிததாதி॥

(மிகப் பருத்த ஸமித்தை நடுவில் அதாவது மேற்கில் வைக்கணும். நடுத்தரமான நீண்டதை தெற்கில் வைக்கணும். மிக மெல்லிய குட்டையானதை வடக்கில் வைக்கணும். ஆகார ஸமித்துகள் இரண்டையும் எதிர்ப்புறம் வடக்கிலும் – தெற்கிலும் சாய்வாக நிறுத்தி வைக்கணும்)

(நடு ஸமித்தைத் தொடணும்)

### பரிஷேசனம்

பரிஷிஞ்சதி । (பரிஷேசனம் செய்ய மந்த்ரம் சொல்லணும்)

அதிதே அனுமன்யஸ் (தெற்கிலே மேற்கிலே இருந்து கிழக்கா நீளவாக்கிலே ஜலத்தை எடுத்துச் சேர்க்கணும்) அனுமதே அனுமன்யஸ்வ। (மேற்கிலே தெற்கிலேயிருந்து வடக்கிலே நீளவாக்கிலே ஜலத்தை எடுத்துச் சேர்க்கணும்) ஸரஸ்வதே அனுமன்யஸ்வ! (வடக்கிலே மேற்கிலேயிருந்து கிழக்கா நீளவாக்கிலே ஜலத்தை எடுத்துச் சேர்க்கணும்) தேவஸவிது: ப்ரஸுவ। (அக்னி மேடையின் வடமேற்கிலே ஆரம்பிச்சு, வடமேற்கிலே முடியற மாதிரி ஜலத்தை எடுத்து நாலாபக்கமும் ப்ரதக்ஷிணமாச் சுத்தணும்)

### அக்னி தியானம்

ப்ராங் முகோ தேவ ஹே அக்னே அபிமுகோ பவ ।।
(அப்படீன்னு அக்னிதேவனை ப்ரார்த்தித்து த்யானிக்கணும்)

### அக்னி அலங்கரணம்

(மந்த்ரம் சொல்லி அக்ஷதையை எடுத்து ஸமர்ப்பிக்கணும்)

1. இந்த்ராய நம: । (கிழக்கிலே), 2. அக்னயே நம: । (தென் கிழக்கிலே) 3. யமாய நம: । (தெற்கிலே), 4. நிர்ருதயே நம: (தென் மேற்கிலே): 5. வருணாய நம : । (மேற்கிலே), 6. வாயவே நம:। (வட மேற்கிலே), 7. ஸோமாய நம:। (வடக்கிலே), 8. ஈசானய நம । (வட கிழக்கிலே) 9. அக்னயே நம : (அக்னியிலே), 10. ஆத்மனே நம :

(தன் மேலே), 11. ஸர்வேப்யோ ப்ராஹ்மணேப்யோ நம: । (ப்ராஹ்மணர்கள் இருக்கிறதா எண்ணி அவா மேலே சேர்க்கணும்)

### ஸமித் ஹோமம்

(பிறகு 16 ஸமித்துகளில் (இத்மம்) ஒரு ஸமித்தைக் கடைசி ஆஹூதிக்காக வடக்கிலே வைச்சுட்டு பாக்கி 15 ஐ நெய்யிலே நனைச்சுண்டு மந்த்ரம் சொல்லணும்) இத்மம் ஆஜ்யேன அப்யஜ்ய। (அந்த ஸமித்துகளை நெய்யில் நனைக்கணும் – அப்புறம்)

(தாமே ஹோமம் செய்யறவா – ப்ரஹ்மாவைக் கேட்பது போலவும் அவர் சொல்வது போலவும் சொல்லணும்)

அஸ்மின்... ஹோமகர்மணி ப்ரஹ்மன் இத்மம்
(அப்படீன்னு சொல்லணும்)

ஆதாஸ்யே! ஓம் ஆதத்ஸ்வ என்று ப்ரஹ்மா பதில் –
அப்புறம் (இதிப்ரஹ்மணோக்தே)
இத்மம் ஆதாய அக்னௌ ப்ரக்ஷியத் ॥ (அந்த ஸமித்துகளை அக்னியில் சேர்க்கணும்)

(இந்த ... ஹோமத்தில ப்ரஹ்மனே இத்மத்தை (ஸமித்தை)

எடுத்து அக்னியில் சேர்க்கிறேன் அப்படீன்னு சொல்லி,
ப்ரஹ்மா ஓம் அப்படியே சேர்க்கலாம் என்று அவர்
பதில் கூற அந்த ஸமித்துகளை அக்னியில் சேர்க்கணும் – அப்புறம்

## ஆஜ்ய ஹோமம்

(நெய்யாலே ஹோமம்)

இதர தர்வ்யா ஆஜ்ய மாதாய। ப்ரஜாபதிம் மனஸா
த்யாயன் உத்தரணம் பரிதி ஸந்திம் அன்வ வஹ்ருத்ய
தக்ஷிணா ப்ராஞ்சம் ருஜூம் ஸந்ததம் ஜ்யோதிஷ்மதி
ஆகாரம் ஆகாரயன் ஸர்வாணி இத்மகாஷ்ட்டானி
ஸம்ஸ்பர்சயதி। ஸ்வாஹா। ப்ரஜாபதய இதம் ந மம ॥

சிறிய 2 ஆவது தர்வி அதாவது; சிறிய பொரச இலையாலே நெய்யை எடுத்து ப்ரஜாபதியை மனதாலே த்யானம் செஞ்சபடி வடக்குப் பருமனான (பரிதி) ஸமித்து ஸந்தியிலிருந்து, அதாவது; வாயு மூலையிலிருந்து தென் கிழக்கில் அதாவது; அக்னி மூலை வரை நேராகத் தொடர்பு விடாமல் அக்னி ஜ்வாலையிலே தாரையாக வர்ஷணம் செய்யணும். எல்லா ஸமித்துகளையும் தொடணும். மந்த்ரம் சொல்லணும்.

ஸ்வாஹா – ப்ரஜாபதய இதம் ந மம ||

(பிறகு இந்த் ஹோமம் ப்ரஜாபதியினுடையது, என்னுடையது அல்ல எனவும்)

ப்ரதான தர்வ்யா ஆஜ்யம் க்ருஹீத்வா, தக்ஷிணம் பரிதி ஸந்திம் அன்வவஹ்ருத்ய ப்ராஞ்சம் – உதஞ்சம் ருஜும் ஸந்ததம் ஆராகம் ஆகாரயதி! இந்த்ராய ஸ்வாஹா! இந்த்ராய இதம் ந மம ||

(இப்போ பெரிய முதல் தர்வியாலே அதாவது; பெரிய பொரச இலையாலே நெய்யை எடுத்துத் தெற்கில் உள்ள பருமனான பரிதி (ஸமித்து) ஸந்தியிலிருந்து, அதாவது; நிம்ருதி மூலையிலிருந்து, வட கிழக்கில் அதாவது; ஈசான மூலை வரை நேராகத் தொடர்பு விடாமல் அக்னிஜ்வாலையிலே தாரையாக வர்ஷணம் செய்யணும். மந்த்ரம் சொல்லணும்.)

இந்த்ராய ஸ்வாஹா – இந்த்ராய இதம் ந மம ||

(பிறகு இந்த ஹோ்மம் இந்த்ரனுடையது என்னுடையதல்ல எனவும்)

அத ஆஜ்ய பாகௌ ஜுஹோதி! உத்தரார்த்த பூர்வார்த்தே!

அக்னயே ஸ்வாஹா ! அக்னய இதம் ந மம !

இப்போ ஆஜ்யபாகம், நெய்யை எடுத்துண்டு மந்த்ரம் சொல்லணும். அக்னயே ஸ்வாஹா – அக்னய இதம் ந மம! வடகிழக்குப் பருமனான ஸமித்தில் சேர்க்கணும். ஸோமாய

ஸ்வாஹா ஸோமாய இதம் ந மம । நெய்யை தென்கிழக்குப் பருத்த – ஸமித்தில் சேர்க்கணும்.

அக்னயே ஸ்வாஹா – அக்னய இதம் ந மம ॥
(நெய்யை நடுப்பக்கத்தில் சேர்க்கணும்)

(ஆஜ்ய பாகம், அக்னிக்கு இந்த ஹோமம் நன்கு செய்யப்பட்டதாகுக என வட கிழக்குப் பரிதியில் சேர்க்கணும். ஸோமனுக்கு இந்த ஹோமம் நன்கு செய்யப்பட்டதாக ஆகட்டும் எனத் தென் கிழக்குப் பரிதியில் சேர்க்கணும்.)

ப்ராயசித்த ஹோமம்

ஸங்கல்ப ப்ரப்ருதி ஏதத் க்ஷணபக்யந்தம் மத்யே
ஸம்பாவித ஸமஸ்த தோஷ ப்ராயச் சித்தார்த்தம்
ஸர்வ ப்ராயச்சித்தம் ஹோஷ்யாமி ।
ஓம் பூர்ப்புவஸ்வாஹா॥ ப்ரஜாபதய இதம் ந மம ॥

(ஸங்கல்பம் தொடங்கி இந்த க்ஷண காலம் வரை இடையிடையே ஏற்பட்ட எல்லா தோஷங்களுக்கும் ப்ராயச்சித்தமாக ஸர்வ ப்ராயச்சித்த ஹோமம் செய்கிறேன். இது ப்ரஜாபதியினுடையது என்னுடையதல்ல.)

# ஸ்ரீ மஹாகணபதி ஹோமம்

## ப்ராதான ஹோமம்

(வைதிக முறை)

இந்த மஹா கணபதி ஹோமம் விசேஷமானது. ஸகல நலன்களையும் தரவல்லது. இதை வெள்ளிக்கிழமையிலோ, அல்லது; சுக்ல பக்ஷ சதுர்த்தியிலோ ஸூர்ய உதயகாலத்தில் செய்வது விசேஷமாகும்.

இந்த ஹோமம் தொடங்கும் முன் முக்ய பொருள்களைத் தயாராக எடுத்து வைத்துக் கொள்ளவும். அதிலும் மிகக் குறிப்பாக

ஒரு முழுத் தேங்காயை உரித்து உடைத்து வைத்துக் கொள்ளவும், அதைச் சிறிது சிறிதாகக் கீறி வைத்துக் கொள்ளவும். அதில் 8 கீற்றுகளை மட்டும் எடுத்து தேன் – நெய் – பால் – சர்க்கரை சேர்த்துக் கலந்து ஹோமம் செய்ய வைத்துக் கொள்ளவும். பாக்கியுள்ளதை மஹா கணபதி – துர்க்கை இவர்களது நைவேத்யத்தியத்திற்கு வைத்துக் கொள்ளவும்.

மேலும், அஷ்டத்ரவ்யங்கள் அவசியம் – அதாவது :

1. கொழுக்கட்டை விழுங்கக்கூடிய அளவுக்கு முழுதாகவும் இருக்கணும் 2. அவல் 3. பொரி 4. ஸத்துமாவு இவைகள் கைப்பிடியளவு இருக்கணும் 5. கரும்புத்துண்டு கணுவளவில் இருக்கணும். 6. தேங்காய், 8. கீற்றுகள் வேணும் 7. எள் – சுருக்கிய உள்ளங்கையளவு 8. வாழைப்பழம் சிறிதானால் முழுசு. பெரியதாக இருந்தால் துண்டம் ஆகியவைதான். இவை ஒவ்வொன்றும் 32, 16, 8 என ஸமமான எண்ணிக்கையில் இருக்கணும் – இதைச் செய்யற ஹோமம் 8 தடவையாகும்.

மேலும், தேங்காய்க் கொட்டாங்கச்சிகளை அக்னிக்குத் தெற்கிலும், வடக்கிலும் மூலமந்த்ரத்தை ஜபித்தபடி கண்களைப் போல வைக்கணும். மட்டைகளை யானையின் துதிக்கையைப் போல அக்னியின் சுற்றுப் பக்கத்தில் வைக்கணும்.

மேலும், தனியாக நெய் – தேங்காய்க் கீற்று, நெல் முக்கண் தேங்காய் மூடி, மற்ற மூடி, அருகம்புல், ஹோம மேடை, தூப தீபாக்ஷதைகள், புஷ்பங்கள், நைவேத்யப் பொருள்கள் – தீர்த்தம், தீர்த்த பாத்ரம், சாம்ப்ராணி – கற்பூரம், விளக்கு, மணி இவைகளை எடுத்து வைத்துக் கொண்டு ஹோமம் செய்யத் தொடங்கணும்)

(அக்னிக்கு ஈசான மூலையில் ஸ்வஸ்வதிக் கோலம் போடணும். அதில் ஒருமுக விளக்கை ஏற்றி வைக்கணும்.)

# ஸ்ரீ மகாகணபதி த்யானம்

## ப்ரதான ஹோமம்

அக்னேர் மத்ய பாகே ஸ்ரீ வல்லப மஹா கணபதிம் த்யாத்வா – ஆவாஹ்ய – ஷோடச உபசார பூஜாம் க்ருத்வா – (இப்போ அக்னியின் நடுப்பகுதியில் ஸ்ரீ வல்லப மஹா கணபதியைத் த்யானம் பண்ணி, ஆவாஹனம் செஞ்சி – ஷோடச உபசார பூஜைகளையும் செய்யணும்.. அதற்கு முன் அங்கந்யாஸ கரந்யாஸங்களைச் செய்ய மந்த்ரம் சொல்லணும்.)

ஓம் அஸ்ய ஸ்ரீ வல்லப மஹா கணபதி மஹா மந்த்ரஸ்ய,
கனகருஷி:, காயத்ரீச்சந்த : – ஸ்ரீ மஹா கணபதி :
தேவதா ||
க்லாம் பீஜம் | க்லீம் சக்தி: | க்லூம் கீலகம் |
ஸ்ரீ வல்லப மஹா கணபதி ப்ரஸாத ஸித்யர்த்தே
ஹோமே, விநியோக : ||

கரந்யாஸம் (மந்த்ரம் சொல்லணும்)

ஓம் க்லாம் – அங்குஷ்ட்டாப்யாம் நம : |
(கட்டை விரல்களைச் சேர்த்துத் தடவணும்)
ஓம் க்லீம் – தர்ஜனீப்யாம் நம : |
(ஆள்காட்டி விரல்களைச் சேர்த்துத் தடவணும்)
ஓம் க்லூம் – மத்யமாப்யாம் நம : |
(நடு விரல்களைச் சேர்த்துத் தடவணும்)
ஓம் க்லேம் – அநாமிகாப்யாம் நம : |
(மோதிர விரல்களைச் சேர்த்துத் தடவணும்)
ஓம் க்லைம் – கனிஷ்ட்டிகாப்யாம் நம : |
(சுண்டு விரல்களைச் சேர்த்துத் தடவணும்)
ஓம் க்லௌம் – கரதல கர ப்ருஷ்ட்டாப்யாம் நம : |
(கைகள் இரண்டையும் சேர்த்து வழிக்கணும்)

அங்கந்யாஸம் (மந்த்ரம் சொல்லணும்)

ஓம் க்லாம் – ஹ்ருதயாய நம: । (மார்பைத் தொடவும்)

ஓம் க்லீம் – சிரஸே ஸ்வாஹா । (தலையைத் தொடவும்)

ஓம் க்லூம் – சிகாயை வஷட் (சிகையைத் தடவவும்)

ஓம் க்லேம் – கவசாய ஹும் (இரு கைகளாலும் உடம்பைத் தழுவவும்)

ஓம் க்லைம் – நேத்ர த்ரயாய வௌஷட்। (இடது கண் நடுப்புருவம் – வலது கண் இவைகளைத் தொடவும்)

ஓம் க்லௌம் – அஸ்த்ராய பட் । ஸ்வாஹா ॥

(இடது உள்ளங்கையைத் தடவவும்)

பூர்ப்புவஸ் ஸுவரோமிதி திக்பந்த் : ॥ (தலையைச் சுற்றி ப்ரதக்ஷிணமா கையாலே சுடக்குப் போடணும்)

த்யானம் (மந்த்ரம் சொல்லணும்)

பீஜா பூர கதேக்ஷு கார்முக ருஜா
சக்ராப்ஜ பாசோத்பல
வ்ரீஹ்யக்ர ஸ்வ விஷான ரத்ன கலச
ப்ரோத்யத் கராம் போ ருஹ : ।
த்யேயோ வல்லபயா ஸ பத்ம கரயா
ச்லிஷ்டோஜ்வலத் பூஷயா
விச்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்த்திதிகரோ
விக்னேச இஷ்டார்த்தத : ॥

அக்னேர் மத்யபாகே ஸ்ரீ வல்லப மஹா கணபதிம் த்யாயாமி

(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

பஞ்ச பூஜை (மந்த்ரம் சொல்லணும்)

லம் – ப்ருதிவ்யாத்மனே – கந்தம் ஸமர்ப்பயாமி ।

(சந்தனம் ஸமர்ப்பிக்கணும்)

ஹம் – ஆகாசாத்மனே – புஷ்பை : பூஜயாமி ।

(புஷ்பங்களை ஸமர்ப்பிக்கணும்)

யம் – வாய்வாத்மனே – தூபம் ஆக்ராபயாமி ।

(தூபம் காட்டணும்)

ரம் – அக்ன்யாத்மனே – தீபம் தர்சயாமி ।

(தீபம் காட்டணும்)

வம் – அம்ருதாத்மனே – அம்ருதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி । (ஏதாவது நைவேத்யம் ஸமர்ப்பிக்கணும்)

ஸம் – ஸர்வாத்மனே – ஸர்வோபசார பூஜாம் ஸமர்ப்பயாமி (அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

மூல மந்த்ரம் ஜபம்

(மந்த்ரம் சொல்லணும்)

(இங்கு மூல மந்த்ரத்தை 36 அல்லது 12 தடவை ஜபம் செய்யணும்)

"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம்
கணபதயே வர வரத ஸர்வ ஜனம் மே
வசம் ஆனய ஸ்வாஹா॥"

ஆவாஹனம்

(மந்த்ரம் சொல்லணும்)

(அக்ஷதை – புஷ்பம் இவைகளைக் கையிலே எடுத்துண்டு மந்த்ரம் சொல்லி, அக்னியில் நடுப்பாகத்தில் ஸ்ரீ வல்லப மஹா கணபதியை ஆவாஹனம் பண்ணணும்.)

கணானாம் த்வா கணபதிகும் ஹவாமஹே
கவிம் கவீனா முபமச் ரவஸ்தமம்।
ஜ்யேஷ்ட்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பத
ஆந : ச்ருண்வன் னூதிபி : ஸீத ஸாதனம் ॥

பீஜாபூர கதேக்ஷு கார்முக ருஜா
சக்ராப்ஜ பாசோத்பல
வ்ரீஹ்யக்ர ஸ்வ விஷாண ரத்ன கலச
ப்ரோத்யத் கராம் போருஹ : ।
த்யேயோ வல்லபயா ஸ பத்ம கரயா
ச்லிஷ்டோ ஜ்வலத் பூஷயா
விச்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்த்திதிகரோ
விக்னேச இஷ்டார்த்தத : ॥

மூல மந்த்ரம்

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வர வரத ஸர்வ ஜனம் மே வசமானய ஸ்வாஹா ॥

காயத்ரீ மஹா மந்த்ரம்

தத் புருஷாய வித்மஹே
வக்ர துண்டாய தீமஹி ॥
தந்நோ தந்தி : ப்ரசோதயாத் ॥

அஸ்மின் அக்னௌ ஸ்ரீ வல்லப மஹா கணபதிம் ஆவாஹயாமி॥ (புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கணும்.)

(ஷோடச உபசார பூஜை)
(மந்த்ரம் சொல்லணும்)

ஸ்ரீ வல்லப மஹா கணபதி ஸ்வாமினே நம :
ஆஸனாதி ஷோடச உபசார பூஜாம் கரோமி ॥

(இப்போ ஸ்வாமிக்கு ஷோடச உபசார வகைகளைச் செய்யணும்)

ஸ்ரீ வல்லப மஹா கணபதயே நம : -- ஆஸனம் ஸமர்ப்பயாமி।

(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கணும்)

” பாத்யம் ஸமர்ப்பயாமி ।
(உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)
” அர்க்யம் ஸமர்ப்பயாமி ( ” ” ” )
” ஆசமனீயம் ஸமர்ப்பயாமி। ( ” ” ” )
” ஸ்நானம் ஸமர்ப்பயாமி! (தீர்த்தத்தை எடுத்து ப்ரோக்ஷிக்கணும்)
ஸ்ரீ வல்லப மஹா கணபதயே ஸ்நானானந்தரம்
ஆசமனீயம் ஸமர்ப்பயாமி ।
(உத்தரணியாலே தீர்த்தம் எடுத்துக் கிண்ணியிலே ஸமர்ப்பிக்கணும்)
” வஸ்த்ர உத்தரீயார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி ।
(வஸ்த்ரங்களுக்குப் பதில் அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" உபவீதார்த்தம் ஆபரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி। (பூணுலுக்கு அணிகளுக்குப் பதில் அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" திவ்யகந்தான் தாரயாமி । (சந்தனம் ஸமர்ப்பிக்கணும்)

" கந்த்ஸ்யோபரி ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி । (மஞ்சள் குங்குமத்திற்குப் பதில் அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

" புஷ்பை : பூஜயாமி (புஷ்பங்களால் அர்ச்சிக்கணும்)

## மந்த்ரம்

ஓம் ஸுமுகாய நம : । ஓம் ஏக தந்தாய நம : ।
ஓம் கபிலாய நம : । ஓம் கஜ கர்ணகாய நம : ।
ஓம் லம்போதராய நம : । ஓம் விகடாய நம : ।
ஓம் விக்னராஜாய நம : । ஓம் விநாயகாய நம : ।
ஓம் தூமகேதவே நம : । ஓம் கணாத்யக்ஷாய நம : ।
ஓம் பாலசந்த்ராய நம : । ஓம் கஜானனாய நம : ।
ஓம் வக்ரதுண்டாய நம : । ஓம் சூர்ப்ப கர்ணாய நம : ।
ஓம் ஹேரம்பாய நம : । ஓம் ஸ்கந்தபூர்வஜாய நம : ।
ஓம் சித்தி விநாயகாய நம : । ஓம் ஸ்ரீ வல்லப மஹா கணபதயே நம : । ஓம் ॥
நானாவித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி ॥
(எஞ்சியுள்ள உதிரிப் புஷ்பங்களை ஸ்மர்ப்பிக்கணும்)
ஓம் ஸ்ரீ வல்லப மஹா கணபதயே
தூப தீபார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி ।
(தூப தீபம் காட்டணும் – இல்லேண்ணா அக்ஷதையை (ஸமர்ப்பிக்கணும்)

## நிவேதனம்

(தேங்காய்க் கீற்று – வெல்லச் சர்க்கரை – தேன் – நெய் – பால் இவைகளைச் சேர்த்து ஒன்றாகக் கலந்தது. கொழுக்கட்டை – அவல் – பொரி– சத்துமாவு– எள் – பழம் – கரும்புத் துண்டு இவைகளையும் வெச்சுண்டு, முன்னதாகச் சொல்லப்பட்ட நிவேதன

மந்த்ரங்களைச் சொல்லிக் கையால் காட்டி நிவேதனம் பண்ணணும்.)

ஓம் ஸ்ரீ வல்லப மஹா கணபதயே நம :
மோதக – ப்ருதுக – லாஜ – ஸக்து – இக்ஷுபர்வ -
நாரிகேள சகலம் – கதளீபலம், இத்யாதீனி
மதுக்ஷீரக்ருதஸிக்தானி, மோதகாதீனி ச ஸர்வம்
நிவேதயாமி ।। (என்று சொல்லி நிவேதனம் செய்யணும்)
"போஜனானந்தரம் கற்பூரம் தாம்பூலம் ஸமர்ப்பயாமி ।
(தீர்த்தத்தாலே வெற்றிலை – பாக்கைப் ப்ரோக்ஷிச்சுட்டு
ஸமர்ப்பிக்கணும்)
"பூகீபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம் ।
கற்பூர சூர்ணஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம் ।।
ஸ்ரீ வல்லப மஹாகணபதயே நம :
கற்பூர நீராஜனம் ஸந்தர்சயாமி । நீராஜனானந்தரம்
ஆசமனீயம் ஸமர்ப்பயாமி ।

ந தத்ர ஸூர்யோ ந பாதி ந சந்த்ர

தாரகம் । நமா வித்யுதோ பாந்திகுதோ அபமக்னி : ।
தமேவ பாந்தம் அநுபாதி ஸர்வம் । தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி ।।

(கற்பூர ஹாரத்தி காட்டணும்)

(தீர்த்தம் ஸமர்ப்பிக்கணும்)
ஸ்ரீ வல்லப மஹா கணபதயே நம : ஸ்மஸ்த உபசார பூஜான் ஸமர்ப்பயாமி ।

(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கணும்)

மூல மந்த்ர ஜபம் (மந்த்ரம் சொல்லணும்)

(இங்கு மூலமந்த்ரத்தை 1008, 108, 54, 36, 28, 12 என்ற கணக்கில் ஜபிக்க வேண்டும். இவைகளை எவ்வளவுக்கெவ்வளவு ஜபிக்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு ஐச்வர்யாதிகளும், ஸுக க்ஷேமாதிகளும் உண்டாகும்)

(ஹோமமும் செய்ய வேணும்)

மூல மந்த்ரம்

"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வர வரத ஸர்வ ஜனம் மேவசம் ஆனய ஸ்வாஹா – ஸ்வாஹா"

## ஆஜ்ய ஹோமம் – நெய்

(மந்த்ரம் சொல்லணும்)

(இங்கு நெய்யினாலே ஹோமம் செய்யும்போது சுண்டு விரலையும், ஆள்காட்டி விரலையும் விட்டு விட்டு, மற்ற விரல்களைச் சேர்த்து ம்ருகீ (மான்) முத்ரை செய்து ஹோமம் செய்யணும்.)

(ப்ரதானதர்வியால் செய்யணும்)

மந்த்ரம்

ஓம் ஸ்வாஹா । ஓம் ஸ்ரீம் ஸ்வாஹா । ஓம் ஸ்ரீம் ஹ்ரீம்
ஸ்வாஹா । ஓம் ஹ்ரீம் ஸ்வாஹா ।
ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் ஸ்வாஹா।
ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் ஸ்வாஹா ।
ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே
ஸ்வாஹா । ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம்
கணபதயே வர வரத ஸ்வாஹா । ஓம் ஸ்ரீம் ஹ்ரீம்
க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத ஸர்வ
ஜனம் மே வசம் ஸ்வாஹா । ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம்
க்லௌம் கம் கணபதயே வரவாத ஸர்வஜனம்
மே வசம் ஆனய ஸ்வாஹா ஸ்வாஹா ।
ஸ்ரீ மஹாகணபதய இதம் ந மம ।।
அபஉபஸ்ப்ருச்ய (ஜலத்தைத் தொட்டுக்கணும்)

## தேங்காய்க் கீற்று ஹோமம்

(மந்த்ரம் சொல்லணும்)

(இப்போ தேங்காயைச் சிறு சிறு கீற்றுகளாக துண்டுகளை வெச்சுண்டு, அவைகளில் தேன் – வெல்லச் சர்க்கரை, நெய் இவைகளைக் கலந்து 8 தடவை ஹோமம் செய்யணும்)

மந்த்ரம்

ஸங்கல்பம் (கைகூப்பிச் சொல்லணும்)

அஸ்மின் நக்ஷத்ரே ................ ராசௌ ஜாதஸ்ய ........
சர்மண : ஸகுடும்பஸ்ய அனுகூலம்
ப்ரயச்ச ப்ரயச்ச, ப்ரதிகூலம் நாசய நாசய,
ஸம்பதோ வர்த்தய வர்த்தய, ஸர்வத்ய விஜயம்
ப்ரயச்ச் ப்ரயச்ச ||

8 தடவை ஹோமம்

(கீழே உள்ள மந்த்ரம் சொல்லித் தேங்காய் ஹோமம் செய்யணும்)

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத ஸர்வ ஜனம் மே வசம் ஆனய ஸ்வாஹா || ஸ்வாஹா ||

(இதேபோல மந்த்ரம் 8 தரம் சொல்லணும்,

(ஆஹூதி பண்ணணும்) ஸ்ரீ மஹா கணபதயே இதம் ந மம !!

## ஆஜ்ய ஹோமம் – நெய்

(மந்த்ரம் சொல்லணும்)

(மறுபடி நெய்யை வெச்சுண்டு 8 தடவை இங்கு கீழே உள்ள மந்த்ரம் சொல்லி ஹோமம் செய்யணும் ம்ருகீ முத்ரையால்)

மந்த்ரம்

கணானாம் த்வா கணபதிகும் ஹவாமஹே ।
கவிம் கவீனாம் உபமச்ரவஸ்தமம் ।
ஜ்யேஷ்ட்ட ராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பதே
ஆந : ச்ருண்வன்னூதிபி : ஸீதஸாதனம் ||
(இதேபோல மந்த்ரம் 8 தரம் சொல்லணும்)

## வரீஹிதான்ய ஹோமம் – நெல்

(நெல்)

(இங்கே நெல்லை வெச்சுண்டு அதனாலே 8 தடவை இங்கு கீழே உள்ள மந்த்ரங்களைச் சொல்லி ஹோமம் செய்யணும்)

மந்த்ரம்

உத்திஷ்ட புருஷ ஹரித பிங்கல லோ ஹிதாக்ஷ
ஸர்வாபீஷ்டம் தேஹி தேஹி தாபய தாபய ஸ்வாஹா ||
அக்னிரூபாய கணப தய இதம் ந மம ||

## நாளிகேர கபால ஹோமம்

(மந்த்ரம் சொல்லணும்)

(இப்போ தேங்காய்க்கண் கொட்டாங்கச்சியாலே ஹோமம் செய்யணும்)

மந்த்ரம்

ஜாதவேதஸே ஸுன்வாம ஸோமமராதீ யதோ
நிதஹாதிவேத: ஸ ந : பர்ஷததி துர்க்கா விச்வா
நாவேவ ஸிந்தும் துரிதாத்யக்னி : || ஸ்வாஹா ||
அக்னிரூபாய ஸ்ரீ மஹா கணபதயே இதம் ந மம ||
(இப்போ கண் இல்லாத கொட்டாங்கச்சியாலே ஹோமம் செய்யணும்)

மந்த்ரம்

த்ருவாஸ் த்ருவாஸு க்ஷிதிஷு க்ஷீயந்தோ
வ்யஸ்மின் பாசம் வருணோ முமோசத்
அபோ வன்வானா அதிதே ருபஸ்த்தாத்
யூயம் பாத ஸ்வஸ்திபி : ஸதா ந : ஸ்வாஹா :.|
வருண ரூபாய ஸ்ரீ மஹா கணபதயே இதம் ந மம ||

8 தடவை ஹோமம்

## க்ருதஸிக்த தூர்வாங்குர த்வய ஹோமம்

(இனி மூலமந்த்ரத்தைச் சொல்லி 8 தரம் அருகம்புல்லை இரண்டிரண்டா வெச்சுண்டு, நெய்யிலே தோச்சு, ஹோமம் பண்ணணும் – மந்த்ரம் சொல்லணும்.)

மந்த்ரம்

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத

ஸர்வஜனம் மேவசம் ஆனய ஸ்வாஹா ।। ஸ்வாஹா ।। (இதே போல 8 தடவை இந்த மந்த்ரம் சொல்லணும் – ஆஹூதி பண்ணணும்)

ஸ்ரீ மஹா கணபதயே இதம் ந மம ।।

## அஷ்டத்ரவ்ய ஹோமம்

(சிலர் இம்மாதிரி 8 திரவியங்களால் ஹோமம் செய்வர்.)

(இனி கொழுக்கட்டை, அவல், பொரி, ஸத்துமாவு, கரும்புத் துண்டு, தேங்காய் கீற்று, எள், வாழைப்பழம், இவைகளை நன்றாய்க் கலந்து 8 தரம் கீழே உள்ள மந்த்ரம் சொல்லி ஹோமம் பண்ணணும்.)

### மந்த்ரம்

ஓம் நமோ வ்ராதபதேய நமோ கணபதயே நம : !

ப்ரமதபதயே நமஸ்தே அஸ்து லம்போதராய

ஏகதந்தாய விக்ன விநாசினே சிவஸுதாய வரத மூர்த்தயே நமோ நம : ஸ்வாஹா ।।

(இதே போல 8 தடவை இந்த மந்த்ரம் சொல்லி ஆஹூதி பண்ணணும்)

ஸ்ரீ மஹா கணபதயே இதம் ந மம் ।।

## ஸ்ரீ மகா கணபதி மூல மந்த்ர ஜபம்

(இங்குள்ள மூல மந்த்ரத்தை 10 தரம் ஜபிக்கணும், மந்த்ரம் சொல்லணும்)

### மந்த்ரம்

"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வர வரத ஸர்வஜனம் மே வசம் ஆனய ஸ்வாஹா ।। ஸ்வாஹா।।"

(இதே மந்த்ரத்தை 10 தரம் ஜபிக்கணும்)

## ஸ்ரீ மஹா கணபதி காயத்ரீ மஹா மந்த்ரம்

(இங்கு வரும் காயத்ரீ மஹா மந்த்ரத்தை 10 தரம் ஜபிக்கணும் – மந்த்ரம் சொல்லணும்)

மந்த்ரம்

" தத்பு ருஷாய வித்மஹே வக்ர துண்டாய தீ மஹி |
தந்நோ தந்தி : ப்ரசோதயாத் || "
(இதே மந்த்ரத்தை 10 தடவை ஜபிக்கணும்)

## ஸ்ரீ கணபதி மாலா மந்த்ரம்

(மந்த்ரம் சொல்லி ஹோமம் செய்யணும்)

ஓம் நமோ மஹா கணபதே, மகா வீராய, தசபுஜாய,
மத்னகால விநாசன, ம்ருத்யும் ஹன ஹன, யமயம
மதம்த, காலம் ஸம்ஹர ஸம்ஹர ஸர்வக்ரஹான்
சூர்ணய சூர்ணய, நாகான் மூடய மூடய, ருத்ரரூப,
த்ரிபுவனேச்வர, ஸர்வதோமுக, ஹூம் பட் ஸ்வாஹா ||
ஓம் நமோ கணபதயே, ச்வேதார்க்க கணபதயே,
ச்வேதார்க்க மூல நிவாஸாய, வாஸுதேவ ப்ரியாய,
தக்ஷ ப்ரஜாபதி ரக்ஷகாய, ஹூர்யவரதாய,
குமாரகுரவே, ப்ரஹ்மாதி ஸுராஸுர வந்திதாய,
ஸர்ப்ப பூஷணாய, சசாங்கசேகராய, ஸர்வ
மாலாங்க்ருத தேஹாய, தர்ம த்வஜாய, தர்ம
வாஹனாய, த்ராஹி த்ராஹி, தேஹி, தேஹி, அவதர
அவதர, கம் கணப்தயே, வக்ர துண்ட கணபதயே,
வரவரத, ஸர்வ புருஷ வசங்கர, ஸர்வதுஷ்ட
ம்ருக வசங்கர, ஸர்வஸ்வ வசங்கர, வசீகுரு
வசீ குரு, ஸர்வதோஷான் பந்தய பந்தய, ஸர்வ
வ்யாதீன் நிக்ருந்தய நிக்ருந்தய, ஸர்வ விஷாணி
ஸம்ஹர ஸம்ஹர, ஸ்ர்வ தாரித்ர்யம் மோசய
மோசய, ஸர்வ விக்னான் சிந்தி சிந்தி, ஸர்வ
வஜ்ராணி ஸ்ப்போடய ஸ்ப்போடய , ஸர்வ
சத்ரூன் உச்சாடய உச்சாடய, ஸர்வ ஸித்திம்
குரு குரு, ஸர்வ கார்யாணி ஸாதய ஸாதய,
காம் கீம் கூம் கைம் கௌம் கம் கணபதயே
ஹூம் பட் ஸ்வாஹா !!

# ஸ்ரீ கணபதி அதர்வ சீர்ஷம்

(மந்த்ரம் சொல்லணும்)

## மந்த்ரம்

பதரம் கர்ணேபி : ச்ருணுயாம தேவா : ।
பத்ரம் பச்யேம அக்ஷிபிர் யுஜத்ரா : ।
ஸ்த்திரை ரங்கைஸ் துஷ்டுவாகும் ஸஸ்தனூபி : ।
வ்யசேம தேவஹிதம் யதாயு : ।
ஸ்வஸ்தின : இந்த்ரோ வ்ருத்த ச்ரவா : ।
ஸ்வஸ்தின : பூஷா விச்வ வேதா : ।
ஸ்வஸ்தின : தார்க்ஷ்யோ அரிஷ்டநேமி : ।.
ஸ்வஸ்தினோ ப்ருஹஸ்பதிர் ததாது ।
ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ।।
அதகணபத்யதர்வ சீர்ஷம் வ்யாக்யாஸ்யாம : ।
ஓம் நமஸ்தே கணபதயே । த்வமேவ ப்ரத்யக்ஷம் தத்வமஸி!
த்வமேவ கேவலம் கர்த்தாஸி! த்வமேவ கேவலம்
தர்த்தாஸி । த்வமேவ கேவலம் ஹர்த்தாஸி !
த்வமேவ ஸர்வம் கல்விதம் ப்ரஹ்மாஸி । த்வம்
ஸாக்ஷாத் ஆத்மாஸி நித்யம் ।।

ருதம் வச்மி । ஸத்யம் வச்மி ।।

அவ த்வம் மாம் । அவ வக்தாரம் । அவ ச்ரோதாரம் ।
அவ தாதார்ம் । அவாநூசானம்
அவ சிஷ்யம்! அவ பச்சாத் தாத் । அவ
புரஸ்தாத் தாத் । அவ உத்தராத் தாத் ।
அவ தக்ஷிணாத் தாத் । அவ ச ஊர்த்வாத் தாத் ।
அவ அதராத் தாத் । ஸர்வதோ மாம் பாஹி பாஹி ஸமந்தாத்।।

த்வம் வாங்மய : த்வம் சின்மய : । த்வம் ஆனந்த மய : த்வம் ப்ரஹ்ம மய : । த்வம் ஸச்சிதானந்தாத் விதீயோ அஸி । த்வம் ஜ்ஞானமயோ விஜ்ஞானமயோ அஸி । த்வம் பர்த்யக்ஷம் ப்ரஹ்மா அஸி ।।

ஸர்வம் ஜகதிதம் த்வத்தோ ஜாயதே । ஸர்வம் ஜகதிதம் த்வத்த। திஷ்ட்டதி । ஸர்வம் ஜகதிதம்த்வயிலயம் ஏஷ்யதி । ஸர்வம் ஜகதிதம் த்வயி ப்ரத்யேதி । த்வம் பூமிராபோ அநலோ அனிலோநப : । த்வம் சத்வாரி வாக் பதானி ॥

த்வம் குணத்ரயாதீத: । த்வம் தேஹத்ரயாதீத : । த்வம் காலத்ரயாதீத : । த்வம் மூலாதார ஸத்திதோ அஸி நித்யம் । த்வம் சக்தி த்ரயாத்மக : । த்வாம் யோகினோ த்யாயந்தி நித்யம் । த்வம் ப்ரஹ்மா –த்வம் விஷ்ணு :– த்வம் ருத்ர :– த்வம் இந்த்ர :– த்வம் அக்னி :– த்வம் வாயு:– த்வம் ஸூர்ய :– த்வம் சந்த்ர :– த்வம் ப்ரஹ்ம பூர்ப்புவஸ் ஸுவரோம் ॥

கணாதிம் பூர்வம் உச்சார்ய வர்ணாதிம் ததனந்தரம் ।
அனுஸ்வார : பரதர :। அர்த்தேந்து லஸிதம் ।
தாரேண ருத்தம் ஏ தத் தவ மனு ஸ்வரூபம் ।
ககார : பூர்வ ரூபம் । அகாரோ மத்யரூபம் ।
அனுஸ்வாரஸ் சாந்த்ய ரூபம் । பிந்து ருத்தர
ரூபம் । நாத : ஸந்தானம் । ஸகும் ஹிதா ஸந்தி : ।
ஸைஷா கணேச வித்யா ।
கணக ருஷி : । நிச்ருத் காயத்ரீச்சந்த : । கணபதிர்
தேவதா । ஓம் கம் கணபதயே நம : ॥
ஏகதந்தாய வித்மஹே வக்ர துண்டாய தீமஹி ।
தன்னோ தந்தி : ப்ரசோதயாத் ॥ 8

ஏகதந்தம் சதுர்ஹஸ்தம் பாசமங்குச தாரிணம் ।
ரதம்சவரதம் ஹஸ்தைர் பிப்ராணம் மூஷகத்வஜம் ॥
ரக்தம் லம்போதரம் சூர்ப்ப கர்ணகம் ரக்தவாஸஸம் ।
ரக்தா கந்தானுலிப்தாங்கம் ரக்த புஷ்பை : ஸுபூஜிதம் ॥
பக்தானுகம்பினம் தேவம் ஜகத்காரண மச்யுதம்।
ஆவிர்ப்பூதம் சஸ்ருஷ்ட்யாதௌப்ரக்ருதே : புருஷாத்பரம் ॥
வம் ஏத்யாயதியோ நித்யம் ஸயோகீயோகினாம் வர : ॥ 9

நமோ வ்ராதபதயே நமோ கணபதயே நம : ப்ரமத — பதயே நமஸ்தே அஸ்து லம்போதராய ஏக தந்தாய விக்ன நாசினே சிவஸுதாய ஸ்ரீ வரத மூர்த்தயே நமோ நம : ||

ஏதத் அதர்வ சீர்ஷம்யோ அதீதே | ஸ ப்ரஹ்ம
பூயாய கல்பதே | ஸ ஸர்வத : ஸுகம் ஏததே |
ஸ ஸர் விக்னனர் நபாத்யதே | ஸபஞ்சமஹா
பாபாத் ப்ரமுச்யதே | ஸாயமதீயானோ திவஸ
க்ருதம் பாபம் நாசயதி | ப்ராதரதீயானோ
ராத்ரி க்ருதம் பாபம் நர்சயதி | ஸாயம் ப்ராத :
ப்ரயுஞ்ஜானோ அபாபோ பவதி | ஸர்வத்ர
அதீயானோ அபவிக்னோ பவதி | தர்ம அர்த்த
காம மோக்ஷம் ச விந்ததி ||
இதம் அதர்வ சீர்ஷம் அசிஷ்யாய ந தேயம் |
யோயதி மோஹாத் தாஸ்யதி | ஸ பாபீயான்
பவதி | ஸஹஸ்ராவர்த்தனாத் | யம் யம் காமம்
அதீதே | தம் தம் அநேன ஸாதயேத் ||
அநேன கணபதிம் அபிஷிஞ்சதி | ஸவாக்மீ பவதி |
சதுர்த்யாம் அநச்னன் ஜபதி | ஸவித்யாவான் பவதி |
இத்யதர்வ வாக்யம் | ப்ரஹ்மாத்யா சரணாம்
வித்யாத் | ந பிபேதி கதாசனேதி ||
யோ தூர்வாங்குரை : யஜதி ஸவைச் ரவணோபமோ
பவதி | யோ லாஜை : யஜதி ஸ யசோவான்
பவதி | ஸமேதாவான் பவதி | யோ மோதக
ஸஹஸ்ரேண யஜதி ஸ வாஞ்சி தபலமவாப்னோதி |
ஸ ஸாஜ்ய ஸமித்பிர் யஜதி ஸ ஸர்வம்
லபதே | ஸ ஸர்வம் லபதே |
அஷ்டௌ ப்ராஹ்மணான் ஸம்யக் க்ராஹயித்வா
ஸூர்ய வர்ச்சஸ்வீ பவதி | ஸூர்ய க்ரஹே
மஹா நத்யாம் ப்ரதிமாஸந்நிதௌ வாஜப்த்வா
ஸித்தமந்த்ரீபவதி | மஹாவிக்னாத் ப்ரமுச்யதே |
மஹா தோஷாத் ப்ரமுச்யதே | மஹா பாபாத்

ப்ரமுச்யதே । ஸ ஸர்வ வித்பவதி । ஸ ஸர்வித் பவதி । ய ஏவம் வேத । இத்யுபநிஷத் ॥

பத்ரம் கர்ணேபி – ப்ருஹஸ்பதிர் ததாது ॥

ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி : ॥

॥ஓம் ॥

குறிப்பு :– (இந்த அதர்வ சீர்ஷ ஜபம் – ஹோமம் யாவும் மிகச் சிறப்பான பலனைத் தரவல்லதாகும். குபேரனாக்கும் – புகழ்தரும், மேதையாக்கும், விரும்பிய பலனைத் தரும், மந்திரியாக்கும், எல்லாமே தரவல்லது. அதிலும் நெய் ஸமித்துகளால் ஹோமம் செய்வது மிக விசேஷம். அவ்வாறு செய்தால் எல்லாவற்றையும் பெற முடியும் என்கிறது சாஸ்திரம்).

॥ ஓம் ॥

## ஸ்வீஷ்டக்ருத ஹோமம்

அந்தே ஸ்விஸ்டக்ருதம் ஜுஹோதி ।

அக்னயே ஸ்விஷ்டக்ருதே ஸ்வாஹா ।

அக்னயே ஸ்விஷ்டக்ருத இதம் ந மம ॥ ஜயாதி ப்ரதிபத்யதே ॥

# ஸ்ரீ வல்லப மஹா கணபதி ஹோமம்

(வேறொரு முறை)

## ப்ரதான ஹோமம்

இப்போ ப்ரதான ஹோமம் – அதாவது ஸ்ரீ வல்லப மஹா கணபதி ஹோமம்.

(இந்த மஹா கணபதி ஹோமம் மிகவும் விசேஷமானது. ஸகல நலன்களையும் தரக்கூடியது.

இந்த ஹோமத்தைச் செய்யத் தொடங்கறதுக்கு முன்னாலே தர்ப்பைகள், ஸமித்துகள் இவைகளை வெச்சுக்கணும். அப்புறம் அஷ்ட த்ரவ்யங்களை – அதாவது; அவல், பொரி, ஸத்துமாவு, தேங்காய்க்கீற்று, தேன், வெல்லச் சர்க்கரை நெய், பழம் (வாழை) இவைகளை ஒண்ணாச் சேர்த்து கலந்து வெச்சுக்கணும்.

அப்புறம் சிறிய அளவு கொழுக்கட்டை, அப்பம், அருகம்புல், நெய், வெள்ளரித்துண்டு, மாதுளம் முத்து, கரும்புத்துண்டு இவைகளைத் தனித் தனியா வெச்சுக்கணும். இவை ஹோமத்திற்கானவை.

முதல்லே ஹோம மேடை, தூப தீபாக்ஷதைகள், புஷ்பங்கள், நைவேத்யப் பொருள்கள், (8 பொருள் கலந்த கலவை) தீர்த்தம் தீர்த்த பாத்ரங்கள், சாம்ப்ராணி, கற்பூரம், விளக்கு, எண்ணெய், திரி, தீப்பெட்டி, மணி இவைகள் எல்லாத்தையும் எடுத்துத் தயாரா வெச்சுண்டு தொடங்கணும்.)

அக்னேர் மத்யபாகே ஸ்ரீ வல்லப மஹா கணபதிம் த்யாத்வா !

ஆவாஹ்ய ! ஷோடச உபசார பூஜாம் க்ருத்வா !

(இப்போ அக்னியின் நடுப்பாகத்திலே ஸ்ரீ வல்லப மஹா கணபதியைத் த்யானம் பண்ணி, ஆவாஹனம் செஞ்சு, 16 வகை உபசாரங்களையும் செய்யணும். அதற்கும் முன்னாலே அங்கந்யாஸம், க்ரந்யாஸம் செய்யணும்.)

மந்த்ரம்

ஓம் அஸ்ய ஸ்ரீ வல்லபமஹா கணபதி மஹா மந்த்ரஸ்ய,
கணகருஷி : நிச்ருத்காயத்ரிச் சந்த : ஸ்ரீ மஹா கணபதி :
தேவதா ||
க்லாம் – பீஜம், க்லீம் சக்தி : | க்லூம் கீலகம்,
ஸ்ரீ வல்லப மஹா கணபதி ப்ரஸாத ஸித்யர்த்தே ஹோமே
விநியோக : ||

## கரந்யாஸம்

மந்த்ரம்

ஓம் க்லாம் – அங்குஷ்ட்டாப்யாம் நம : (கட்டைவிரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஓம் க்லீம் – தர்ஜனீப்யாம் நம : (ஆள்காட்டி விரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஓம் க்லூம் – மத்யமாப்யாம் நம: (நடுவிரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஓம் க்லேம் – அநாமிகாப்யாம் நம:
(மோதிர விரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஓம் க்லைம் - கனிஷ்ட்டிகாப்யாம் நம: ( சுண்டு விரல்களைச் சேர்த்துத் தடவணும்)

ஓம் க்லௌம் – கரதல கரப்ருஷ்ட்டாப்யாம் நம: ।
(கைகள் இரண்டையும் சேர்த்து வழிக்கணும்)

## அங்கந்யாஸம் மந்த்ரம்

ஓம் க்லாம் – ஹ்ருதயாய நம: (மார்பைத் தொடணும்)

ஓம் க்லீம் – சிரஸே ஸ்வாஹா (தலையைத் தொடணும்)

ஓம் க்லூம் – சிகாயை வஷட் (சிகையைத் தடவணும்)

ஓம் க்லேம் – கவசாய ஹும் (இரு கைகளாலும் உடம்பைத் தழுவணும்)

ஓம் க்லைம் – நேத்ரத்ரயாய வௌஷட் (இடது கண், நடுப் புருவம், வலது கண் இவைகளைத் தொடணும்)

ஓம் க்லௌம் – அஸ்த்ராய பட் । ஸ்வாஹா ॥
(இடது உள்ளங்கையை தடவணும்)

பூர்ப்புவஸ்ஸுவ ரோமிதி திக்பந்த:। (தலையைச் சுற்றி ப்ரதக்ஷிணமா கையாலே சுடக்குப் போடணும்)

## த்யானம்

### மந்த்ரம்

பீஜாபூர கதேக்ஷு கார்முக ருஜா
சக்ராப்ஜ பாசோத்பல
வ்ரீஹ்யக்ர ஸ்வ விஷான ரத்ன கலச
ப்ரோத்யத் கராம் போருஹ : ।

த்யேயோ வல்லபயா ஸ பத்ம கரயா
ச்லிஷ்டோஜ்வலத் பூஷயா
விச்வோத்பத்தி விபத்தி ஸம்ஸ்த்திதி கரோ
விக்னேச இஷ்டார்த்தத : ।
அக்னேர் மத்ய பாகே ஸ்ரீ வல்லப மஹாகணபதிம் த்யாயாமி ॥
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

## பஞ்ச பூஜை

### மந்த்ரம்

லம் – ப்ருதிவ்யாத்மனே – கந்தம் ஸமர்ப்பயாமி
(சந்தனம் ஸமர்ப்பிக்கணும்)
ஹம் – ஆகாசாத்மனே – புஷ்பை ; பூஜயாமி ।
(புஷ்பங்களை ஸமர்ப்பிக்கணும்)
யம் – வாய்வாத்மனே – தூபம் ஆக்ராபயாமி ।
(தூபம் காட்டணும்)
ரம் – அக்ன்யாத்மனே – தீபம் தர்சயாமி ।
(தீபத்தைக் காட்டணும்)

வம் – அம்ருதாத்மனே – அம்ருதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி । (ஏதாவது நைவேத்யம் பண்ணணும்) ஸம் – ஸர்வாத்மனே – ஸர்வ உபசாரபூஜாம் ஸமர்ப்பயாமி ।
(அக்ஷதையை ஸமர்ப்பிக்கணும்)

### இப்போ – மூல மந்த்ர ஜபம்

(மூல மந்த்ரத்தை 1008, 108, 36 – 28 – 12 – என்றபடி ஜபம் செய்யணும்) (அதிகமாகவும் ஜபம் செய்யலாம். அது மிகவும் ச்ரேயஸகரம்)

### மந்த்ரம்

"ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே
வரவரத ஸர்வஜனம் மே வசம் ஆனய ஸ்வாஹா ॥"

## ஆவாஹனம்

### மந்த்ரம்

(அக்ஷதை – புஷ்பம் இவைகளைக் கையிலே எடுத்துண்டு மந்த்ரம் சொல்லி அக்னி நடுப்பக்கத்திலே ஶ்ரீ வல்லப மஹா கணபதியை ஆவாஹனம் பண்ணணும்.)

### மூல மந்த்ரம்

ஓம் ஶ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத ஸர்வஜனம் மே வசம் ஆனய ஸ்வாஹா ||

கணானாம் த்வா கணபதிகும் ஹவாமஹே
கவிம் கவீனாம் உபம ச்ரவஸ்தமம் |
ஜயேஷ்ட்ட ராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பதே
ஆ ந : ச்ருண்வன் னூதிபி : ஸீதஸாதனம் ||

### காயத்ரீ மஹாமந்த்ரம்

தத்புருஷாய வித்மஹே
வக்ரதுண்டாய தீமஹி |
நந்நோ தந்தி : ப்ரசோதயாத் ||
அஸ்மின் அக்னௌ ஶ்ரீ வல்லப மஹா கணபதிம் ஆவாஹயாமி ||
(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கணும்)

### ஷோடச உபசார பூஜை

### மந்த்ரம்

ஓம் ஶ்ரீ வல்லப கணபதி ஸ்வாமினே நம : | ஆஸனாதி ஷோர்டச உபசார பூஜாம் கரோமி|

(இப்போ ஸ்வாமிக்கு 16 வகை உபசார வகைகளைச் செய்யணும்.

ஓம் ஶ்ரீ வல்லப மஹா கணபதயே நம : – ஆஸனம் ஸமர்ப்பயாமி|

(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கணும்)

” ” பாத்யம் ஸமர்ப்பயாமி (உத்தரணியிலே தீர்த்தம்

